ஸ்ரீ. உ.வே. திருமழிசை கோயில் கந்தாடை

## அண்ணாவப்பங்கார் ஸ்வாமி வைப4வம்

ஸகலமஹீபரத்நகநகாஞ்சிதஸந்மகுட நிகரவிசித்ரகாந்திபரிவீதநிஜாங்க்4ரியுக3: ।
புரவரபூ4மிஸாரஸுசிரார்ஜிதபுண்யப2லம் வரகு3ணவீரராக4வகு3ருர் ஜயதாத் ஸுசிரம்॥

(அனைத்து அரசர்களுடைய ஶிரஸ்ஸிலேயுள்ள ஸ்வர்ணமகுடங்களில் பதிக்கப்பட்ட ரத்நங்களின் ஒளியால் சூழப்பட்ட திருவடியிணையை உடையவரும், சிறந்த ஸ்த2லமான மஹீஸாரமென்னும் திருமழிசைக்ஷேத்ரம் நெடுங்காலம் செய்த புண்யத்தின்ப2லமாய் அவதரித்தவரும், நற்கு3ணங்கள் நிரம்பியவருமான வீரராக4வாசார்ய ஸ்வாமி வெகுகாலம் சிறந்து விளங்கட்டும்)

அண்ணாவப்பங்கார் என்று ப்ரஸித்3த4மான திருநாமத்தையுடையவரான வாதூ4லகுலதிலகரான வீரராக4வாசார்ய ஸ்வாமி முதலியாண்டான் திருவம்ஶத்தில் மஹீஸாரக்ஷேத்ரமான திருமழிசையில் ஶாலிவாஹந ஶகாப்3த3ம் 1688 வதான (கி.பி.1766) வ்யயநாமஸம்வத்ஸரம் ஆனி மாஸம் க்ருஷ்ணபக்ஷசதுர்த்தீ2 வியாழக்கிழமை அவிட்ட நக்ஷத்ரத்தில் அவதரித்தார். இவருடைய குடி யதிவரப4ாகி3நேய ஸ்ரீத3ாஶரதி2கு3ரூத்தமாவதாராலங்க்ருதமான கோயில் கந்தாடைவம்ஶம். யஜுஶ்ஶாகை2. ஆபஸ்தம்ப3ஸூத்ரம். லக்ஷ்மீஸ்தோத்ரத்தின் இறுதியில் "ரகு4வராசார்யதநயாத் ஸமுத்பந்ந:" என்று இவர் அருளிச்செய்கையாலே இவருடைய பிதாமஹர் ரகு4வராசார்யர் என்று அறியலாகிறது. ஸ்ரீப4க்திஸாரோத3யத்தின் இறுதியில் "நரஸிம்ஹதே3ஶிக பு4வா" என்றதால் இவருடைய திருத்தகப்பனார் நரஸிம்ஹாசார்யர் என்று தெரியவருகிறது. இவர் பதினைந்து வயதுக்குள் ஸ்வஶாகை2யான யஜுஶ்ஶாகை2யையும், தர்க்க-வ்யாகரண மீமாம்ஸா-ஸாங்க்2ய-பாதஞ்ஜலாதி3 ஶாஸ்த்ரங்களையும், அப்4யஸித்து, ஜ்யோதிஶ்ஶாஸ்த்ர ஸங்கீ3த ப4ரதஶாஸ்த்ரங்களையும் அவலோகித்து, அநுதி3நமும் ஏத4மாந மேதை4யையுடையவராய், தத3நந்தரம் இருபது வயஸ்ஸுக்குள் ஸகலஶாஸ்த்ரவித்தமராய், தமக்குப் பிதாவான நரஸிம்ஹாசார்யரிடத்தில் நின்றும் திருமந்த்ரார்த்த2ம் முதலிய ஸம்ப்ரத3ாயக்3ரந்த2ங்களை லபி4த்து க்3ரந்தநிர்மாண சதுரராய் எழுந்தருளியிருந்தார்.

அண்ணாவப்பங்கார் ஸ்வாமிக்கு வேத3ாந்தவித்3யோபதேஷ்டாக்களான ஆசார்யர்கள் வாதூ4லவரத3ாசார்யரும், ஸ்ரீரங்க3ாசார்யருமாவர். இவர் ஸ்ரீரங்க3ாதி3 தி3வ்யதேஶயாத்ரை எழுந்தருளி, ஆங்காங்கே குத்3ருஷ்டிகளை ஜயித்து, எம்பெருமானார் ஸித்3த4ாந்தத்தை வாழ்வித்துக் கொண்டு போந்தார். இவர் அருளிச்செய்த க்3ரந்தங்கள்.

1) ஸ்ரீ ப4க்திஸாரோத3யம்
2) வேத3வல்லி ஶதகம்
3) ஹேமலதாஷ்டகம்
4) அபீ4ஷ்டத3ண்ட3கம்
5) ஶுகஸந்தே3ஶம்
6) கமலாகல்யாண நாடகம்
7) மலயஜாபரிணய நாடிகா
8) ந்ருஸிம்ஹாஷ்டகம்
9) ஸ்ரீ வசநபூ4ஷணவ்யாக்2யாநத்துக்கு அரும்பத விளக்கம்
10) திருச்சந்தவிருத்த ப்ரதிபத3ம்
11) ஸ்ரீரங்க3ராஜஸ்தவ வ்யாக்2யானம்
12) மஹாவீரசரித வ்யாக்2யா
13) உத்தரராமசரித வ்யாக்2யா
14) ஶதஶ்லோகீ வ்யாக்2யா
15) ராமாநுஜாஷ்டக வ்யாக்2யா
16) நக்ஷத்ரமாலிகா வ்யாக்2யா
17) தே3வராஜகு3ரு விரசித வரவரமுநிஶதக வ்யாக்2யா
18) து3ஷ்கரஶ்லோக டிப்பணீ
19) தி3நசர்யா வ்யாக்2யா
20) ஷண்மத த3ர்ஶிநீ
21) லக்ஷ்ம்யா: உபாயத்வ நிராஸ:
22) லக்ஷ்மீவிபு4த்வ நிராஸ:
23) ஸூக்திஸாது4த்வமாலா
24) தத்வஸூத4ா
25) தத்வஸார வ்யாக்2யா-ரத்நஸாரிணீ
26) ஸச்சரித்ர பரித்ராணம்
27) பழநடை விளக்கம்
28) த்ரிம்ஶத்ப்ரஶ்நோத்தரம்
29) லக்ஷ்மீமங்க3ளதீ3பிகா
30) ராமாநுஜாதிமாநுஷ வைப4வ ஸ்தோத்ரம்
31) அநுப்ரவேஶ ஶ்ருதி விவரணம்.
32) "ஶைலோக்3நிஶ்ச" ஶ்லோக வ்யாக்2யா
33) மஹீஸாரவிஷயசூர்ணிகா
34) 'ஸ்வாந்தே மே மத3னஸ்தி2திம் பரிஹர' இத்யாதி3 ஶ்லோக வ்யாக்2யானம்
35) ஸச்சர்யா சஷகம்
36) ப்ராப்யப்ரபஞ்சநபஞ்சவிம்ஶதி:
37) ந்யாயமந்த்3ரம்
38) தாத்பர்ய ஸச்ச2ரீகரம்
39) வசஸ்ஸுத4ாமீமாம்ஸா
40) வசஸ்ஸுத4ாபூர்வபக்ஷோத்3த4ாரம்
41) ப்3ரஹ்மத்வடங்கம்
42) லக்ஷ்மீஸ்தோத்ரம்
43) வரணபஞ்சவிம்ஶதி:

இவர் 51 திருநக்ஷத்ரம் இவ்விபூ4தியில் எழுந்தருளியிருந்து ஈஶ்வர வருஷம் ஐப்பசி மாஸம் ஶுக்லபக்ஷ சதுர்த்த3ஶியில் திருநாட்டுக்கெழுந்தருளினார்.

இவர் தனியன்

ஸ்ரீமத்3வதூ4லநரஸிம்ஹகு3ரோஸ்தநூஜம்
ஸ்ரீமத்ததீ3யபத3பங்கஜப்4ருங்க3ராஜம் ।
ஸ்ரீரங்க3ராஜவரத3ார்யக்ருபாSSத்தப4ாஷ்யம்
ஸேவே ஸத3ா ரகு4வரார்யமுத3ாரசர்யம் ॥

॥ श्रीः ॥

श्रीमते रामानुजाय नमः

# श्रीमद्वाधूलकुलतिलकवीरराघवगुरुकृतं

# लक्ष्मीस्तोत्रम्

श्रिया युक्तः श्रीमान् स्थितिजनिलयादीन् कलयते
    जगत्या नैवं चेत् स्वमपि न च पुष्णात्यशरणः ।
अतस्त्वां तत्तादृग्दुरधिगमनिःसीमविभवां
    भजामो रुद्राणीपरिचितपदाम्भोजयुगलीम् ॥ १ ॥

अयि ! श्रीस्त्वं पूर्वं जनकतनयीभूय जगतां
    प्रभो रामस्याभूः प्रियसहचरी कोसलपतेः ।
तथाऽपुष्यः कृष्णं नतजननि ! रुक्मीन्द्रतनया
    विना त्वां गोविन्दः प्रभवति जगत्यां क्वचन वा ॥ २ ॥

त्वया दृष्टः शंभुस्त्रिपुरमथनायालमरुण-
    क्षपानाथावाङ्कां शिरसि निदधानावुदयतः ।
पिबन् भक्त्या पद्मे ! तव चरणनिर्णेजनजलं
    फणीनामीशानः परिवहति मूर्ध्ना वसुमतीम् ॥ ३ ॥

त्वदीये नम्रार्तिक्षपणनिपुणे पादकमले
    वहन् मूर्ध्ना जम्भद्विषदवति गीर्वाणनगरीम् ।
त्वदीयभ्रूभङ्गाज्जनयति जगत् पङ्कजजनिः
    त्वया दृष्टः को वा जननि ! पदमुच्चैर्न भजते ॥ ४ ॥

हरेर्वक्षःपीठीमनुकलमुपास्थाय विपुलां
सुधासारैः श्रीमच्चरणनलिनान्तर्विगलितैः ।
प्रसिञ्चन्त्यञ्चन्ती कुमुदवनमम्भोजनिलये !
कथं वा नाधत्से मयि पदयुगं नम्रजननि! ॥ ५ ॥

पुरा ते पादाब्जप्रसृमरपरागान् स्वमकुटे
वहन् रुद्रोऽप्यद्रेर्दुहितरमुदारामुदवहत् ।
शरण्ये ! लोकानां मुनिजनवरेण्ये! तनुभृताम्
अपाङ्गस्ते भूयादतुलकुशलायाब्जनिलये! ॥ ६ ॥

पुरारेस्त्वां पुष्पैः सह गिरिजयाऽऽराधितवतो
गलं गत्वा घोरं गरमभवदिन्दूपलमिव ।
अतः श्रीः ! श्रुत्यन्ताः प्रणिजगुरुदारांस्तव गुणान्
इयत्तानिर्मुक्ताननवधिकवात्सल्यजलधे! ॥ ७ ॥

शरज्ज्योत्स्नाकान्तिस्तुहिनकरबिम्बाभवदना
कुचाभ्यामानम्रा कुवलयदलस्पर्धिनयना ।
दधाना हस्ताभ्यां नलिनयुगलं काऽपि महसां
ततिर्विष्णोर्वक्षःस्थलमधिवसन्ती विजयते ॥ ८ ॥

सचन्द्रे सोष्णांशौ विरमति विरिञ्चे सहशिवे
कृतान्ते जातान्ते भजति च विरामं सुरपतौ ।
अनूपे सर्वस्मिन् वटदलतले त्वत्पतिरसौ
मुकुन्दः सानन्दं विहरति रमे ! कल्पविरमे ॥ ९ ॥

पयःपारावारे मणिविरचिते मण्टपतले
प्रतीहारे वाणीधरणिधरकन्यापरिवृते ।
मणीपीठे तस्मिन् कनकमयपद्मे स्थितिजुषो
हरेरङ्कस्थां त्वां कतिचन भजन्ते कृतधियः ॥ १० ॥

परव्योम्नः पत्युः प्रियमहिषि ! ते पादयुगली-
निदिध्यासा यस्मिन्नुदयमयते लोकजननि! ।
तदैवास्मै देवि! प्रदिशसि सुरेन्द्राभिलषितं
पदं वाणीं चापि प्रचुरकरुणासारभरिताम् ॥ ११ ॥

वदन्ति त्वां सन्तो हुतभुजमधिष्ठाय सकलं
समश्नन्तीं होत्रा हुतमनुसवं श्रीर्भगवति ! ।
पुराणा वाण्येवं प्रणिगदति बिम्बे दिनपतेः
समं पत्याऽनर्घाण्यनुदिनमिहार्घ्याणि भजते ॥ १२ ॥

त्वमात्मा त्वं कालस्त्वमसि च परंज्योतिरुदधिः
त्वमक्ष्णोरानन्दस्त्वमसि च परब्रह्ममहिषी ।
चिदात्मा त्वं लक्ष्मीर्जगदिह तवापाङ्गचलनं
समालम्ब्य श्रीमान् सृजति भगवानत्त्यवति च ॥ १३॥

गुणैः पूर्णे ! निर्णेजनजलपवित्रत्रिभुवने !
जरादूरीभूते ! जननि ! निगमान्तस्तवपदे! ।
नतानां स्तोतॄणाममितफलविश्राणनचणौ
वयं वैकुण्ठेशप्रणयिनि ! भजामस्तव पदौ ॥ १४ ॥

क्षमाऽऽचारौ दूरे गुरुचरणभक्तिस्तु सुतरां
तथाऽधर्मेऽप्यास्था तव चरणचिन्ता मयि कुतः ।
तथाऽप्यङ्गापाङ्गानयि ! कलय लक्ष्मीस्तव दयां
प्रशंसन्त्युद्दामां यमनियमवन्तो मुनिजनाः ॥ १५ ॥

तवापाङ्गैर्दृष्टो जननि ! करुणार्द्रैर्भवति यः
स वेत्ता शास्त्राणां स खलु कुलशीलादिसहितः ।
स दर्पं कान्दर्पं शमयति च दान्तेन मनसा
प्रशास्त्येनामीशश्चतुरुदधिवेलां वसुमतीम् ॥ १६ ॥

अदोषः को वाऽऽस्ते जन इति रुषं शेषशयितुः
परिष्वङ्गैस्तुङ्गैः प्रशमयसि कारुण्यभरिते! ।
मदीयानार्द्रानप्यधिकमपराधान् भगवति !
क्षमस्वेमां लक्ष्मि ! स्तुतिमपि ममाङ्गीकुरु मुदा ॥ १७ ॥

कदाऽरण्ये पुण्ये कमलवनवापीपरिवृते
तरूणां छायाभिस्तरणिकिरणान्तर्धिनि तले ।
वसन् मातर्लक्ष्मीः ! कमलवनवासैकरसिके !
प्रसीदेति क्रोशन् कलुषमपनेष्ये परिणतम् ॥ १८ ॥

इति श्रीभूसारं पुरमधिवसन् राघवकविः
कुले वाधूलाख्ये महति जनिमान् लोकविनुते ।
सतां सेवी सत्त्वाधिकरघुवराचार्यतनयात्
समुत्पन्नो लक्ष्म्याः स्तुतिभिरधुनाऽऽनर्च चरणौ ॥१९ ॥

॥ इति श्रीवाधूलवीरराघवाचार्यकृतिषु
श्रीलक्ष्मीस्तोत्रं समाप्तम् ॥

ஶ்ரீ:

# லக்ஷ்மீஸ்தோத்ரம் - பொழிப்புரை

1) ஶ்ரியா யுக்த: ஶ்ரீமாந் ஸ்தி$_2$திஜநிலயாதீ$_3$ந் கலயதே
ஜக$_3$த்யா நைவம் சேத் ஸ்வமபி ந ச புஷ்ணாத்யஶரண: |
அதஸ்த்வாம் தத்தாத்$_3$ருக்$_3$ து$_3$ரதி$_4$க$_3$ம நிஸ்ஸீமவிப$_4$வாம்
ப$_4$ஜாமோ ருத்$_3$ராணீ பரிசித பத$_3$ாம்பே$_4$ாஜயுக$_3$லீம் ||

பெரியபிராட்டியாருடன் கூடிய எம்பெருமான் இவ்வுலகின் ஸ்தி$_2$தி, ஸ்ருஷ்டி ஸம்ஹாராதி$_3$களைச் செய்கிறான். இவ்வாறு எம்பெருமான் ஶ்ரிய: பதியாக இருந்து இவற்றைச் செய்யவில்லையெனில் அவன் தன்னையும் போஷித்துக் கொள்வதில்லை. தாயே! ஆகையால் அறியவரிதான எல்லையற்ற பெருமையை உடையவளும், மலைமகளால் போற்றப்பட்ட தாமரை போன்ற திருவடியிணையை உடையவளுமான உன்னை ஸேவிக்கிறோம்.

2) அயி ஶ்ரீஸ்த்வம் பூர்வம் ஜநகதநயீபூ$_4$ய ஜக$_3$ தாம்
ப்ரபே$_4$ா ராமஸ்யாபூ$_4$: ப்ரியஸஹசரீ கோஸலபதே: |
தத$_2$ாSபுஷ்ய: க்ருஷ்ணம் நதஜநநி! ருக்மீந்த்$_3$ர தநயா
விநா த்வாம் கே$_3$ாவிந்த$_3$: ப்ரப$_4$வதி ஜக$_3$த்யாம் க்வசந வா ||

அடிபணிந்தவர்களிடத்தில் தாய் போல் மிகுந்த கருணையுடைய ஸ்ரீதே$_3$வியே! நீ முன்பு ஜநகமஹாராஜனின் மகளாகி இவ்வுலகங்கள் அனைத்திற்கும் தலைவனும், கோஸலதே$_3$ஶத்திற்கு அதி$_4$பதியுமான இராமபிரானின் இனிய துணைவியானாய். அவ்வாறே ருக்மிணியாய் க்ருஷ்ணனான எம்பெருமானைப் போஷித்தாய். நீயின்றி உன் மணாளனான கோவிந்தன் இவ்வுலகங்களுக்கு ப்ரபு$_4$ ஆவனோ?

3) த்வயா த்$_3$ருஷ்ட: ஶம்பு$_4$ஸ் த்ரிபுரமத$_2$நாயாலமருண-
க்ஷபாநாத$_2$ாவாஜ்ஞாம் ஶிரஸி நித$_3$த$_4$ாநாவுத$_3$யத: |
பிப$_3$ந் ப$_4$க்த்யா பத்$_3$மே! தவ சரண நிர்ணேஜநஜலம்
ப$_2$ணீநாமீஶாந: பரிவஹதி மூர்த்$_4$நா வஸுமதீம் ||

செந்தாமரையில் வாஸம் செய்பவளே! உன்னால் கடாக்ஷிக்கப்பட்டே ஶிவபெருமான் த்ரிபுரத்தை அழிக்க ஸமர்த்த$_2$னானான். ஸூர்யசந்த்$_3$ரர்கள் உன் கட்டளையை ஶிரமேற்கொண்டு உதி$_3$க்கின்றனர். பாம்புகளின் தலைவனான திருவநந்தாழ்வான் உனது திருவடிகளை விளக்கிய தீர்த்த$_2$த்தைப் பருகியே தனது திருமுடியினால் இவ்வுலகை த$_4$ரிக்கிறான்.

4) த்வதீ$_3$யே நம்ரார்தி க்ஷபணநிபுணே பாத$_3$கமலே
வஹன் மூர்த்$_4$னா ஜம்ப$_4$த்$_3$விஷத$_3$வதி கீ$_3$ர்வாணநக$_3$ரீம் |
த்வதீய ப்$_4$ரூப$_4$ங்க$_3$ாஜ்ஜனயதி ஜக$_3$த் பங்கஜ ஜனி:
த்வயா த்$_3$ருஷ்ட: கோ வா ஜனனி! பத$_3$முச்சைர் ந ப$_4$ஜதே ||

தாயே! அடிபணிந்தவர்களின் துயரங்களைப் போக்கவல்லதான உனது திருவடித்தாமரைகளைத் தனது தலையால் த$_4$ரித்தே இந்த்$_3$ரன் தே$_3$வர்களின் தலைநகரமான அமராவதியைக் காக்கிறான். அவ்வாறே எம்பெருமானின் உந்தித்தாமரையில் பிறந்த பிரமனும் உனது புருவநெறிப்பால் இவ்வுலகைப் படைக்கிறான். உன்னால் கடாக்ஷிக்கப்பட்ட எவன் தான் உயர்ந்த பதவியை அடையமாட்டான். (ஜம்ப$_4$த்$_3$விஷத் - ஜம்ப$_4$ன் என்ற அஸுரனுக்கு எதிரியானவன் - இந்த்$_3$ரன்)

5) ஹரேர் வக்ஷ: பீடமனுகலமுபாஸ்த$_2$ாய விபுலாம்
ஸுத$_4$ாஸாரை: ஶ்ரீமச்சரண நலிநாந்தர் விக$_3$லிதை: |
ப்ரஸிஞ்சந்த்யஞ்சந்தீ குமுத$_3$வநமம்பே$_4$ாஜ நிலயே!
கத$_2$ம் வா நாத$_4$த்ஸே மயி பத$_3$யுக$_3$ம் நம்ரஜநனி ||

தாயே! தாமரைப்பூவில் தோன்றியவளே! எம்பெருமானின் அகன்ற திருமார்பெனும் பீட$_2$த்தை நித்யவாஸஸ்தா$_2$நமாகப் பெற்று, பின்பு உனது அழகான திருவடித்தாமரைகளிலிருந்து பொழிகின்ற அம்ருதமழையால் வழியனைத்தையும் நனைத்துக்கொண்டு குமுதவனத்திற்குச் செல்லுகையில் உன் திருவடியிணையை அடியேன்மீதிலும் ஏன் வைப்பதில்லை?

6) புரா தே பாதா$_3$ப்$_3$ஜ ப்ரஸ்ருமரபராகா$_3$ந் ஸ்வமகுடே
வஹந் ருத்$_3$ரோSப்யத்$_3$ரே: து$_3$ஹிதரமுதா$_3$ராமுத$_3$வஹத் |
ஶரண்யே! லோகாநாம் முநிஜநவரேண்யே தநுப்$_4$ருதாம்
அபாங்க$_3$ஸ்தே பூயாத$_3$துல குஶலாயாப்$_3$ஜ நிலயே ||

முன்பு உனது திருவடித்தாமரைகளிலிருந்து விழுந்த மகரந்த துகள்களைத் தனது மகுடத்தில் த$_4$ரித்தே ருத்$_3$ரன் இனியளான அத்$_3$ரிகந்யையை (மலைமகளை) மணந்தான். இவ்வுலகங்கள் அனைத்திற்கும் தஞ்சமானவளே! தாமரை மலரை இருப்பிடமாகக் கொண்டவளே! உனது கடைக்கண் பார்வை ஜீவராஶிகளின் ஒப்பற்ற நன்மையின் பொருட்டாகுக.

7) புராரேஸ்த்வாம் புஷ்பை: ஸஹ கி$_3$ரிஜயாSSராதி$_4$தவதோ
க$_3$லம் க$_3$த்வா கே$_4$ரம் க$_3$ரமப$_4$வதி$_3$ந்து$_3$பலமிவ |
அத: ஶ்ரீ! ஶ்ருத்யந்தா: ப்ரணிஜகு$_3$ருதா$_3$ராம்ஸ்தவகு$_3$ணாந்
இயத்தா நிர்முக்தாநநவதி$_4$க வாத்ஸல்ய ஜலதே$_4$ ||

ஶ்ரீதே$_3$வியே! வாத்ஸல்ய குணத்திற்கு எல்லையற்ற கடலானவளே! உன்னை மலைமகளுடன் மலர்களினால் ஆராதி$_4$த்த ஶிவபெருமானின் கழுத்தை அடைந்த கொடிய விஷமானது சந்த்$_3$ரகாந்தக்கல்லைப் போல் குளிர்ந்த தன்மையை அடைந்தது. அதனாலேயே வேதா$_3$ந்தங்கள் உன்னை "உதா$_3$ரா" (வண்மையுடையவள்) என்றும், உன்னுடைய குணங்களை எல்லையற்றவை என்றும் பாடின.

8) ஶரஜ்ஜ்யோத்ஸ்நா காந்தி:ஸ்துஹின கரபி$_3$ம்ப$_3$ப$_4$வதநா
குசாப$_4$யாமாநம்ரா குவலயத$_3$லஸ்பர்த்$_3$தி$_4$நயநா ।
த$_3$த$_4$நா ஹஸ்தாப$_4$யாம் நலிநயுக$_3$ளம் காऽபி மஹஸாம்
ததிர்விஷ்ணோர் வக்ஷ:ஸ்த$_2$லமதி$_4$வஸந்தீ விஜயதே ॥

ஶரத்$_3$கால நிலவிற்கொப்பான காந்தியுடையவளும், சந்த்$_3$ரபி$_3$ம்ப$_3$ம் போன்ற திருமுகத்தை உடையவளும், திருமுலைகளின் ப$_4$ாரத்தால் சிறிது குனிந்தவளும், குவளைமலர்களுடன் போட்டியிடும் திருக்கண்களை உடையவளும், திருக்கைகளில் தாமரைகளை ஏந்தியவளும், எம்பெருமானின் திருமார்பகத்தில் வஸிப்பவளுமான பிராட்டி வர்ணிக்கமுடியாத ஒளிக்கூட்டம் போல் இருந்து கொண்டு வீறுபெறுகிறாள்.

9) ஸசந்த்$_3$ரே ஸோஷ்ணாம்ஶௌ விரமதி விரிஞ்சே ஸஹஶிவே
க்ருதாந்தே ஜாதாந்தே ப$_4$ஜதி ச விராமம் ஸுரபதௌ ।
அநூபே ஸர்வஸ்மிந் வடத$_3$லதலே த்வத்பதிரஸௌ
முகுந்த$_3$: ஸாநந்த$_3$ம் விஹரதி ரமே! கல்பவிரமே ॥

ரமையே! எங்கும் நீர்சூழ்ந்த பொழுதான கல்பத்தின் இறுதிக்காலத்தில் சந்த்$_3$ரன், ஸூர்யன், காலன், தே$_3$வர்தலைவன், ஶிவன், ப்$_3$ரஹ்மா ஆகிய அனைவரும் ஒடுங்கிய பின்னும் உன் மணாளனான முகுந்த$_3$ன் ஆலிலையில் மகிழ்ச்சியுடன் விளையாடுகிறான்.

10) பய: பாராவாரே மணிவிரசிதே மண்டபதலே
ப்ரதீஹாரே வாணீத$_4$ரணித$_4$ர கந்யா பரிவ்ருதே ।
மணீபீடே$_2$ தஸ்மிந் கநகமயபத்$_3$மே ஸ்தி$_2$திஜுஷோ
ஹரேரங்கஸ்த$_2$ாம் த்வாம் கதிசன ப$_4$ஜந்தே க்ருததி$_4$ய: ॥

பாற்கடலின் கரையில், மணிகளால் செய்யப்பட்ட திருமண்டபத்தில் கலைமகளாலும், மலைமகளாலும் இருபுறமும் சூழப்பட்ட வாயிலில், மணிகளாலான பீட$_2$த்தில் பொன்மயமான தாமரைமலரில் வீற்றிருக்கும் எம்பெருமானின் திருமடியில் அமர்ந்திருக்கும் உன்னைச் சில அறிவாளிகளே ஸேவிக்கின்றனர்.

11) பரவ்யோம்ந: பத்யு: ப்ரியமஹிஷி! தே பாத$_3$ யுக$_3$லீ
நிதி$_3$த்$_4$யாஸா யஸ்மிந்நுத$_3$ய மயதே லோகஜநநி |
ததை$_3$வாஸ்மை தே$_3$வி ப்ரதி$_3$ஶஸி ஸுரேந்த்$_3$ராபி$_4$லஷிதம்
பத$_3$ம் வாணீம் சாபி ப்ரசுர கருணாஸார ப$_4$ரிதாம் ||

பரமபத$_3$நாத$_2$னின் ப்ரியமஹிஷியே! உனது திருவடியிணையின் இடைவிடாத த்$_4$யாநம் எவனுக்கு உண்டாகிறதோ, அப்பொழுதே அவனுக்கு நீ தே$_3$வர் தலைவனாலும் விரும்பப்பட்ட பதவியையும், மிகுந்த கருணை நிறைந்த வாக்கையும் அளிக்கிறாய்.

12) வத$_3$ந்தி த்வாம் ஸந்தோ ஹுதபு$_4$ஜமதி$_4$ஷ்ட$_2$ாய ஸகலம்
ஸமஶ்நந்தீம் ஹோத்ரா ஹுதமநுஸவம் ஶ்ரீர் ப$_4$க$_3$வதி |
புராணா வாண்யேவம் ப்ரணிக$_3$த$_3$தி பி$_3$ம்பே$_3$ தி$_3$நபதே:
ஸமம் பத்யாநர்க$_4$ாண்யநுதிநமிஹார்க்$_4$யாணி ப$_4$ஜதே ||

ஹே ப$_4$க$_3$வதி! (கல்யாண கு$_3$ணங்கள் நிறைந்த ஶ்ரீதே$_3$வியே!) ஒவ்வொரு யாக$_3$த்திலும் ருத்விக்குகளால் வேள்வித்தீயில் ஹோமம் செய்யப்பட்ட ஹவிஸ்ஸை, அந்த அக்$_3$நியை அதி$_4$ஷ்டி$_2$த்து உண்பவளாக உன்னை நல்லோர் பகர்கின்றனர். இவ்வாறே அநாதி$_3$யான மறைநூலும் தினந்தோறும் த்$_3$விஜர்களால் ஸூர்யனை உத்$_3$தே$_3$ஶித்து கொடுக்கப்படும் விலைமதிப்பற்ற அர்க்$_4$யங்களை நீயே உன் மணாளனான எம்பெருமானுடன் அந்த ஸூர்ய பி$_3$ம்ப$_3$த்தில் இருந்து கொண்டு ஏற்கிறாய் என்று கூறுகிறது.

13) த்வமாத்மா த்வம் காலஸ்த்வமஸி ச பரம் ஜ்யோதிருத$_3$தி$_4$:
த்வமக்ஷ்ணோராநந்த$_3$ஸ் த்வமஸி ச பரம் ப்$_3$ரஹ்மமஹிஷீ |
சித$_3$ாத்மா த்வம் லக்ஷ்மீர் ஜக$_3$தி$_3$ஹ தவாபாங்க$_3$ சலனம்
ஸமாலம்ப்$_3$ய ஶ்ரீமாந் ஸ்ருஜதி ப$_4$க$_3$வாநத்யவதி ச ||

லக்ஷ்மீதே$_3$வியே! நீ எம்பெருமானுக்கு ஶரீரமாக[1] இருக்கிறாய். பரப்$_3$ரஹ்மமஹிஷியாக இருப்பதால் நீ காலமாகவுமாகிறாய். நீ பரஞ்ஜ்யோதியாகிறாய். நீ கடலுமாகிறாய். அறிவுள்ள ஜீவனாகவும் ஆகிறாய். நீ மேலும் கண்களுக்கு ஆநந்த$_3$முமாகிறாய். உனது கடைக்கண்களின் போக்கைப் பின்பற்றியே எம்பெருமான் இவ்வுலகைப் படைக்கிறான், காக்கிறான், உட்கொள்கிறான்.

14) கு$_3$ணை: பூர்ணே! நிர்ணேஜநஜலபவித்ர த்ரிபு$_4$வநே!
ஜரா தூ$_3$ரீபூ$_4$தே! ஜநநி! நிக$_3$மாந்தஸ்தவபதே$_3$ |
நதாநாம் ஸ்தோத்ரூணாமமித ப$_2$ல விஶ்ராணந சணௌ
வயம் வைகுண்டே$_2$ஶப்ரணயினி! ப$_4$ஜாமஸ்தவ பதௌ$_3$ ||

கல்யாணகு$_3$ணங்கள் நிறைந்தவளே! திருவடிகளை விளக்கிய தீர்த்த$_2$த்தினால் மூவுலகையும் புனிதமாக்குபவளே! மூப்பிற்கு அப்பாற்பட்டவளே! தாயே! உபநிடதங்களால் போற்றப்படுபவளே! வைகுண்ட$_2$நாத$_2$னுக்கு இனியவளே! துதிக்கும் அடியவர்களுக்கு அளவற்ற பலன்களைக் கொடுக்கவல்ல உனது திருவடியிணையை நாங்கள் ஸேவிக்கிறோம்.

15) க்ஷமாSSசாரௌ தூ$_3$ரே கு$_3$ருசரணப$_4$க்திஸ்து ஸுதராம்
தத$_2$ாS த$_4$ர்மேSப்யாஸ்த$_2$ா தவ சரணசிந்தா மயி குத: |
தத$_2$ாSப்யங்க$_3$ாபாங்க$_3$ாநயி! கலயே லக்ஷ்மீஸ்தவ த$_3$யாம்
ப்ரஶம்ஸந்த்யுத்$_3$தாமாம் யமநியமவந்தோ முநிஜநா: ||

அடியேனிடத்தில் மன்னிக்கும் தன்மையும், நல்லொழுக்கமும் இல்லை. ஆசார்யனின் திருவடியில் ப$_4$க்தியோ அடியோடில்லை. த$_4$ர்மத்தில் ஈடுபாடில்லாததோடு, அத$_4$ர்மத்தில் மிகுந்த நாட்டமுமுள்ளது. இப்படியிருக்கையில் உனது திருவடிகளைப் பற்றிய எண்ணம் எவ்வாறு அடியேனிடத்தில் உண்டாகும்? இப்படியிருப்பினும், அடியேனை நீ கடாக்ஷிக்க வேண்டும். ஏனெனில், யமநியமங்களுடைய முனிவர்கள் உனது கருணையை தடையற்றதாகப் புகழ்கின்றனரே.

---

1) ஆத்மா ஜீவே, த்$_4$ருதௌ தேஹே இத்யாதி$_3$ வைஜயந்தீகோஶத்தின்படி இங்கு ஆத்மஶப்$_3$த$_3$ம் ஶரீரத்தைக் குறிக்கிறது.

16) தவாபாங்கை3ர் த்3ருஷ்டோ ஜநநி! கருணார்த்3ரைர் ப4வதி ய:
ஸ வேத்தா ஶாஸ்த்ராணாம் ஸ க2லு குலஶீலாதி3ஸஹித: |
ஸ த3ர்பம் காந்த3ர்பம் ஶமயதி ச தா3ந்தேந மநஸா
ப்ரஶாஸ்த்யேநாமீஶ: சதுருத3தி4 வேலாம் வஸுமதீம் ||

தாயே! உனது கருணை நிறைந்த குளிர்ந்த கடைக்கண்களின் பார்வைக்கு எவன் இலக்காகிறானோ, அவன் அனைத்து ஶாஸ்த்ரங்களையும் அறிந்தவனாயும், நற்குடிப்பிறப்பு, நல்லொழுக்கம் முதலியவைகளுடன் கூடியவனாயும் ஆகிறான். மேலும், அவன் தனது கட்டுப்பட்ட மனதினால், மந்மத2னின் க3ர்வத்தை அடக்குகிறான். நான்கு ஸமுத்3ரங்களை எல்லையாகக் கொண்ட இந்த பூ4மியனைத்தையும் ஆள்கிறான்.

17) அதோ3ஷ: கோ வாSSஸ்தே ஜந இதி ருஷம் ஶேஷஶயிது:
பரிஷ்வங்கை3ஸ் துங்கை3: ப்ரஶமயஸி காருண்யப4ரிதே! |
மதீ3யாநார்த்3ராநப்யதி4கமபராதா4ந் ப4க3வதி
க்ஷமஸ்வேமாம் லக்ஷ்மி! ஸ்துதிமபி மமாங்கீ3குரு முதா3 ||

கருணை நிறைந்தவளே! நீ ஆதி3ஶேஷன் மீது திருக்கண்வளரும் எம்பெருமானின் கோபத்தை "குற்றமற்ற சேதனன் எவன்தான் இருக்கிறான்" என்று கூறி, அன்பான அரவணைப்புகளால் தணிக்கிறாய். ஆகையால் அடியேனது மிகுந்த அபராத4ங்களைப் பொறுத்தருள்வாயாக. மேலும் அடியேனுடைய இந்த ஸ்துதியையும் ஏற்றுக்கொள்வாயாக.

18) கதா3Sரண்யே புண்யே கமலவநவாபீ பரிவ்ருதே
தரூணாம் சா2யாபி4ஸ் தரணிகிரணாந்தர்தி4நி தலே |
வஸந் மாதர் லக்ஷ்மீ:! கமலவநவாஸைக ரஸிகே
ப்ரஸீதே3தி க்ரோஶந் கலுஷமபநேஷ்யே பரிணதம் ||

தாமரை மலரில் வஸிப்பதில் விருப்பமுடையவளே! தாமரை மலர்கள் நிறைந்த நீர்நிலைகளால் சூழப்பட்டதும், மரங்களின் நிழலால் மறைக்கப்பட்ட ஸூர்யகிரணங்கள் உடையதுமான, புண்யமான காட்டு ப்ரதே$_3$ஶத்தில் வாழ்ந்து கொண்டு, "அருள்வாய்" என்று கூக்குரலிட்டு, எப்பொழுது அடியேன் எனது பாபப$_2$லமான மிகுந்த குற்றங்களைப் போக்கிக் கொள்வேன்.

19) இதி ஶ்ரீபூ$_4$ஸாரம்புரமதி$_4$வஸந் ராக$_4$வகவி:
குலே வாதூ$_4$லாக்$_2$யே மஹதி ஜநிமாந் லோகவிநுதே |
ஸதாம் ஸேவீ ஸத்த்வாதி$_4$க ரகு$_4$வராசார்யதநயாத்
ஸமுத்பந்நோ லக்ஷ்ம்யா: ஸ்துதிபி$_4$ரது$_4$நாSSநர்ச்ச சரணௌ |

இவ்வாறு பூ$_4$ஸாரக்ஷேத்ரமான திருமழிசையில் உலகத்தார் அனைவராலும் வணங்கப்பட்ட உயர்ந்த வாதூ$_4$ல குலத்தில் மிகுந்த ஸாத்விகரான ரகு$_4$வராசார்யரின் குமாரரான நரஸிம்ஹாசார்யரிடமிருந்து தோன்றியவரும், நல்லோர்களைப் பணிபவருமான ராக$_4$வகவி இந்த துதிகளால் பெரிய பிராட்டியாரின் திருவடிகளை அர்ச்சித்தார்.

❃❃❃❃❃